உ

சிவமயம்.

இந்திராவதாரநல்லூர் என்ற

இளையான்குடி

# ஸ்ரீ வாள்மேல் நடந்த அம்மன்மீது

# அந்தாதி.



இயற்றியவர்:

ஸ்ரீலஸ்ரீ சிவானந்த ஞான தேசிக ஸ்வாமிகள்

வேதாந்த மடம்,

இளையான்குடி.

உ

சிவமயம்



# இளையான்குடி

# ஸ்ரீ வாள்மேல் நடந்த அம்மன்

# அந்தாதி.

நிகழும் அட்சய ஆண்டு தைத் திங்கள் 29-ம் நாள் 11—2—87 புதன்கிழமை சுக்கிலபட்ச திரயோதசி திதியும் புனர்பூச நட்சத்திரமும் சித்தயோகமும் கூடிய சுபதினத்தன்று காலை 9-40 மணிக்குமேல் 10-21 மணிக்குள்

இளையான்குடி

ஸ்ரீவாள்மேல்நடந்த அம்மன் திருக்கோவிலில்

ஜீரணோத்தாரண அஷ்டபந்தன

**மஹா கும்பாபிஷேகம்**

நடைபெறும்போது

இந்நூல் வெளியீடு செய்யலானது

இயற்றியவர்:

ஸ்ரீலஸ்ரீ சிவானந்த ஞான தேசிக ஸ்வாமிகள்

வேதாந்த மடம்,

இளையான்குடி.



ஸ்ரீ சிவானந்த சுவாமிகள்
வேதாந்த மடம், இளையான்குடி.

14-2

இந்த அரிய நூல் ஸ்ரீ வாள்மேல் நடந்த அம்பாள் அந்தாதியினை அச்சு இயற்ற பொருள் உதவிபுரிந்த தவத்திரு புண்ணிய சொரூப சீலர்களான

1. திரு. மு. மாணிக்கம், சார் பதிவாளர், காட்டூரணி (இருப்பு) இளையான்குடி.

2. திரு. அ. மீ. ஷாகுல் ஹமீது, மேலப்பள்ளி தெரு, இளையான்குடி.

3. திரு. த. வெள்ளைச்சாமி, மேலாளர், பாண்டியன் கிராம வங்கி, வன்னிமடை.

4. திரு. அ. க. பொ. ரெத்தினம், காசாளர், பாரத ஸ்டேட் பேங்க், அரியாண்டிபுரம் (இருப்பு) பரமக்குடி.

5. திரு. ஆர். நடராஜன், உரிமையாளர். உமா பிரிண்டர்ஸ், 5, பாரதியார் தெரு, இளையான்குடி.

6. திரு. கு. விவேகாநந்தம், கிராதி—பைப்பு சிமிண்டு உரை தயாரிப்பாளர், 114-B, காமராஜர் ரோடு, இளையான்குடி.

7. ஸ்ரீமதி A. லெக்ஷிமி அம்மாள், ஆலம்பச்சேரி.

8. கு சு. அம்மையப்பன், மாஜி ராணுவத்தினர் புதூர் — இளையான்குடி. (இருப்பு) குப்பக்குறிச்சி திருநெல்வேலி மாவட்டம்

கற்றவர் நற்றவரிதனை கருத்துடன் படிப்பீர்
பெற்றனம் மானிடப் பிறவி

சிவமயம்

# முகவுரை

குருபரன் இன்னகர் வந்ததின் பெருமை, இவ்வூரில் பூர்வம் ஒருகால் பொன்னகர்க் இறைவன் இப்புனித பூமி யாகிய மண்ணுலகு வந்து பல தலம் சென்று வழிபட்டு வருங்கால், இவ்வழி வரும் சமயம், இவ்விடம் கடம்ப வனமாக இருந்து தனக்கு காட்சி அளித்த தாம், அதனைக் கண்டு களித்து சிறிது நேரம் நின்று வியந்தனர், பின் ஆலோசித்தன ராம், அதன் பெருமையால், தனக்கு ஞான நிலை ஏற்படஞான மிகுதியானது. இந்திரனுக்கு வந்ததின் சான்றாக இவ்விடம் ஞானிகள் தவநிலை புரிந்த இடமாக இருக்கக் கூடுமென்று தன்னுளத்தில், கருதி. கடம்பவனம் மத்தியில் ஓர் ஒப்பற்ற சிவாலயம் நிறுவி, அங்கு சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து, அதற்கு தன்பெயரால் சுவாமிக்கு ஸ்ரீராஜேந்திர சோதிஸ்வரர் என்ற நாமமும், தனக்கு ஞான நிலை உண்டான இடமான தால் அம்பாளுக்குப் பெயர் ஞானாம்பிகை என்று நாமம் இட்டு வணங்கி வந்தனர். சுவாமி அம்பாளுக்கு அபிஷேக பூஜை யாதிகளுக்கு கோவிலின் அருகில் வடபுரம் தினமும் ஸ்நானம் செய்யவும், தன் பெயரால் தேவேந்திர புஷ்கரணி என்னும், குளம் ஏற்படுத்தியும். அதில் நீராடி, ஆலயம் வலம் வந்து. சுவாமியை வணங்குவோர்க்கு சர்வ தோஷ பாபம் நீங்கி, சர்வ மங்கள காரிய சித்திகள், அடைந்தோர், எண்ணற்றோர், அன்னார் என்னுலகு வருவர் என்றும் பற்பல பணிசெய்து நற்பலன் பெற்று தன்னகர் சென்றனர். இவ்வகை பணி செய்து முடித்து விட்டு, சென்றதின் பயனால், இவ்வூருக்கு இந்திராவ தாரநல்லூர், என்று பெயர் பெற்று விளங்கினதாம்.

அதன் பின்னர், இவ்வூரில் இருந்த முதியவர்கள் பலர், சிவன்கோவிலுக்கு, மேற்கு திசையில், ஸ்ரீ பெருமாள் கோவிலும், தெற்கு திசையில், ஸ்ரீ முனிஸ்வரர் கோவிலும், வடக்கு திசையில், ஸ்ரீ வாளவந்தம்பாள் கோவிலும், நிறுவி வழிபாடு செய்து வந்தனர். அப்படி இருந்து வருங்கால், இந்திரன் நினைத்தார், தான் கட்டிய ஆலயத்தின், ஞாபகம்

குன்றாத நிலையில் மனம் இருந்ததின் விளைவாக, இந்திரனே இவ்வூரில் வெள்ளாளர் குலத்தில் குபேர சம்பத்துள்ள ஒரு தனவானுக்கு மகவாக மாறன் அவதரித்து, தந்தை தாய் இருவருக்கும் ஒரே புதல்வராக வளர்ந்து. நாளொருமேனி பொழுதொரு வண்ணமாய், வளர்ந்து, கல்வி பல பயின்று, வித்தை பல கற்று தர்மம் மிக புரிந்தும், பருவகாலம் பெற்று, திருமணம் பெற்றார். தானும், துணைவியும், இல்லறம் நடத்தி, நல்லறம் புரிந்து வருங்கால், தருமமே துணையென கண்டு, அடியார் தமக்கு உண்டியிடுதல் உயர்வென வுளத்தில் எண்ணி, விடாது, தருமம், சிவவேடம் புனைந்த அனைவருக்கும் அன்னம் வழங்கி வந்தனர், மாறனும் அவர் தம்பதியும்.

இப்படி செய்து வருங்கால், குபேர சம்பத்துள்ள மாறனது செல்வம் தேய்பிறை போல் குன்றின, குன்றினும் மாறனது மனம் குன்றாது அடியவர்க்குணவு அளித்தல் குறையவில்லை. இளசை சென்ற இந்திரனான மாறனுக்கு, சோதித்தல் மிகுதியென. இறைவன்பால் இறைவி புகல, அதனை அறிய ஈசன், தன்பொருட்டு சென்ற இந்திரனான மாறனுக்கு, தனி யிடம் தர வேணும் என, அக்கணமே அகத்தில் நினைத்தார் இறைவன்.

வறுமையுற்ற மாறன்பால், தக்ஷிணாயன காலம், ஆவணி மாதம், அம்மாவாசை கூடிய மக நட்சத்திரத்தில் அடைமழை அடைத்துப் பெய்யும் நேரம், இரவு மணி பணிரெண்டு, அர்த்தராத்திரி வேளையில், வறுமை முகம் காட்டி மாறன் இல்லம் தேடி, மகேசன் அடியவர் வேடம் பூண்டு, பசியின் கொடுமை காட்டி, வறுமையின் நிலைவுருவாக, கையில் கலி ஒன்று பிடித்த வண்ணம், தள்ளாடிய கோலத்துடன் மாறன் இல்லம் வந்து, வாசல் முகப்பில் நினறு அய்ய என்று அழைக்க ஈசன்,

அக்குரல் கேட்டு, மிக்க ஓடிவந்து, வாசல் கதவுதனை திறந்து, ஈசனாகிய பெரியவரை மாறன் கையை பிடித்து வீட்டினுள் அழைத்துவந்து அருகிலுள்ள ஆசனத்தில்அமர்த்தி,

சுவாமி தாங்களுக்கு யாது வேணுமென்று மாறன் வினவ, சோதிக்கவந்த ஈசன் எனக்கு உணவு வேண்டும் உற்றபசி நீக்கவேண்டும் இலேல் உயிர்போம் பாவம் தமக்கே என்றார், கைலைநாதன்.

இவ்வாறு, குந்தியபரமன் கூறிய மொழி கேட்டு, மறு மொழி பேசா மாறன் மனவியிடம் சென்று, இம்மொழி கூற. உணவது வேண்டும், வயது மிகு பெரியோர்க்கு, என்றார் கணவர் வாக்கு கருத்தில்கொண்டு. அமுதுஆக்க அரிசியில்லை அரிசி யாக்க நெல்யில்லை. அடுத்த வீட்டில் கேட்கவோ அர்த்தராத்திரியாயின. என் செய்வோம்,

ஆனதால் இன்று நமது நாற்றங்காலில், நெல்லதுநாற்று பாவிவந்தீர்கள், விடாமழையினால், நெல்மணிகள், மேலே மிதந்து ஓர் பகுதியில், ஒதுங்கி மிதக்கும், அன்னதை அறித்து வாருங்கள் அடியாள் அமுது ஆக்குகிறேன் என்றார் மனைவி. அம்மொழி கேட்டு நெல்லினை அறிக்க கூடையினை எடுத்து வழிதடுமாறி நாற்றாங்கால்சென்று ஒதுங்கியநெல்லை ஓர் கூடையில் அறித்து வீடு திரும்பி வந்தனர். எதிரே சென்று தாரும் என்று வாங்கி, சேறு நீக்கி ஈரம் போக்கி அரிசியாக்கி சமையல் செய்து முடித்தனர். கொல்லையில் இருந்த கீரை வகைகளை பறித்து பலவகை கறியாய் பொறிப்பன வறுப்பன அவிப்பன இன்னும் பல செய்முறை செய்து தூங்கும் அடிய வரை அழைத்து வாருங்கள் சமையல் வகைகளை பாருங்கள் உணவு அருந்த செய்யுங்கள் என்று மனைவி பகர, மாறன் புன்னகை கொண்டு கண்ணயர்ந்த ஈசன்பால் வர ஆசனத்தில் இருந்த ஆலமர் கடவுள், வான் வழி சென்று மான்மழு தாங்கி விடைமீது அம்பிகையோடு அமர்ந்து மாறனுக்கும் மாறன் மனைவிக்கும் காட்சியது தந்தார். உயர்நிலை பெற்றார் மாறன்.

என்பெரும் உலகம் வந்து நீ சேறும் என்று அசரீர் வாக்கு அங்ஙனம் கிட்டியது. பின்னர் இளையான்குடி என்று ஈசன் பகர அவ்வாக்கு இவ்வூர்க்கு பலித்தன நன்கு அமைந்தன-பலித்தன. பரமன் வாக்கு பாரினில்இளையான்குடி

என்றுமே விளங்கின. அரன் பகர்ந்தருளி வான்வழி சென்று தன்பதி அடைந்தார். மாறனும் மனையாளும் தன் பணி முடித்து நன்மொழி பெற்று ஈசனுடன் இரண்டறக் கலந்தனர். மாறனுக்கு தனிமடம் அமைத்து ஆவணி மகத்தில் சிறப்புற அன்னதானம் இன்னும் நடந்து வருகிறது.

எண்ணிய பலனை எளிதில் அடைவரிது
கண்மூன் றுடையான் கருத்து

மாறன் வுளத்தில் நினைத்தார். தன்பொருட்டு ஈசன், எவ்வடிவு பெற்று விண்ணுலகு விட்டு, இந்நிலவுலகு வந்தனரோ, அந்நிலை நான் பெற வேண்டும், நான் விட்ட பணி முடித்துமே வரவேண்டும், என்று ஈசன் பால் மாறன் வேண்ட, வேண்டிய மாறனுக்கு, ஆகுக, ஆகுக என்றனர். மாறன் முன்னுருவம் மாற்றி பின்னுருவம் எற்று, தென்திசை பிறந்து வளர்பிறை போல், உருவும், திருவும், அறிவும், கல்வியும், அடைவுடன் பெற்று, வளர்ந்து வருங்கால், பல தலம் சென்று, ஈசனைக் கண்டு, உன் பெருமை யானறிவேன். எனை நீ காக்கும் கடமை என வேண்டி, நலம் பல பெற்று, கானப்பேர் வந்து ஞான குருவாம். ஸ்ரீலஸ்ரீசெல்லப்ப ஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள் திருவடி தீக்ஷை பெற்று, ஞானப்பால்வுண்டு ஞானோப தேசமும் வேதாந்தசாஸ்திரம் அனைத்தும் குருமுகமாய்க் கற்றும் குருபகவான் இன்று முதல் உனது நாமம் சிவானந்தசுவாமி என்று சூட்டப்பெற்றும் பல ஆண்டுகள் குரு பணி செய்து நல் முகூர்த்த வேளையில் குருவின்பால் விடை பெற்று இன்னநகர் வந்து முன் பணியெல்லாம் தன் பணி என்று. இன்னகர் மத்தியில் சிவாலயத்திற்கும் கிழக்கு ஸ்ரீ வாளவந்தம்மன் கோவிலுக்கு தெற்கு, சுவாமி நந்தவனத்துக்கும் மேற்கு, அம்மன் நந்தவனத்துக்கும் வடக்கு. மாதேவன் சன்னதி முன்னும், வீரச் செல்வி ஆலயத்திற்கு பின்னும், தங்குவதற்கு மடமது அமைத்து, அதற்கு வேதாந்த மடம் என நாமம் சூட்டி தமை நாடிவரும் துறவியர்க்கும், அன்பர் தமக்கும், இன்முகமுடன் நன்மொழி பகன்று, ஞானோபதேசம் செய்தும், நூல் பல தம் சீடர்களுக்கு பயிற்றுவித்தும், நல்ல மாணாக்கர்களாக ஆக்கினார்கள். சிஷ்ய பரம்பரையை நல்ல விற்பன்னராக விளங்கும்படி இந்து, முஸ்லீம் கிருஸ்தவ மக்கள் சைவத்தை பின்பற்றி சாந்த சீலர்களாக திகழச்செய்தனர். தனது சிஷியர்கள் பற்பல நாடு சென்று தான் கற்ற கல்வியை போதித்தும் வந்தனர். சான்றோராய் ஆங்காங்கு திகழ்ந்து வருகின்றனர்.

பின்னர் சுவாமிகள் பிறவிப் பிணியை நீக்கும் பொருட்டு, காசி முதல் சேதுவரை கானப்பேர் முதல் கன்னி வரை மூவர் அமர்ந்த இடமும் நால்வர் பாடிய இடமும் எண்ணற்ற மூர்த்தி தலம் முறையாய் தீர்த்தமாடி வலம் வந்து வணங்கி விண்ணப் பம் செய்தும் விரும்பியதுதான் பெறுவாய் என்றார் ஈசன். தன் னருளால் நம்போன்ரோர்க்கு சுவாமிகள்-நூல் பல செய்தும் அச்சது செய்வித்தும்-சித்திர கவிகள் இயற்றியும்-கற்றவர் தமக்கு கற்றுணரும் பொருட்டு-நற்பலனளிக்க-நம் குருநாதர் அற்புத மொழியால்-ஸ்ரீ வாளவந்தம்பாள் பேரில் அந்தாதி எனும் 100 பாடல் இயற்றியுளது அதன் பின்னர்

தன் பணி முடிந்தன தாயே வாளவந்தாள்
என்னை நீ ஆள்வாய் இனி.

என்று வேண்டியும்-சேதுவில் எமனைமில் தன் பெயரால் ஆஸ் ரமம் நிறுவி பற்பல ஆண்டு நன்கு நடந்து வரும் வகையில் திட்டமிட்டு வைத்தனர் ஆண்டு பல கடந்தன ஆத்ம சாந்தி பெற இறைவன் பால் பிரமாதீச ஆவணித்திங்கள் 31 நாள் ஞாயிற்றுக்கிழமை பரணி நட்சத்திரத்தில் 17—9—73ல இரவு இறைவனொடு இரண்டறக் கலந்தனர்-நம் குருநாதர்-அன் னார் பணி அவனியில் ஓங்கிட இறைவன் அருள் புரிந்திட குரு பகவான் சிவலாய முன்னர் சுவாமியின் பார்வையில் வேதாந்தமடம் கட்டிடம் மத்தியில் சமாதியுற்று சிவலிங்கம் ஆனார்கள். பூசையாதிகள் நடந்தும் அருள் புரிந்தும் தன் வழி பெறுவோர் பலர் வாளவந்தாள் அந்தாதியும் சுவாமி பேரில் திருத்தாண்டகம் அம்பாள் பேரில் துதி பஞ்சகம் அச்சு இயற்று தற்குபொருளுதவி புரிந்த புண்ணியற்கு நற்பலன் கிட்டி நல் லாசியுரை வழங்க மலைமாது மணாளனை பிரார்த்திப்போ மாகுக.

இங்ஙனம்,

சற்குரு சரணாலயன்,
சிவா. சுப்புச்சுவாமி,
335, காமராஜர் சாலை, இளையான்குடி.
பசும்பொன் முத்துராமலிங்கம்.மாவட்டம்.

உ
சிவமயம்.

# இளசைமா நகரத்தின் கண்ணே கோவில் கொண்டு வீற்றிருக்கும்
# ஸ்ரீ அருள்மிகு வாள்வேல் நடந்த அம்பாள் மீது பாடிய வெண்பா அந்தாதி.

இயற்றியவர் :

இளையான்குடி வேதாந்த மடத்தின் தலைவர்
ஸ்ரீலஸ்ரீ சிவானந்த ஞானதேசிக சுவாமியவர்கள்

## காப்பு

திருமறை கரிமுகன் சிவ குரு அறுமுகன்
திருமகள் கலைமகள் சிவைபரை மலைமகள்
திருமரு அரியயன் சிவனவ னடியவர்
திருமரு குருபதம் சிரமனம் வதிதியே

சீரார் இளசைவளர் செல்வியே வாளவந்தாள்
பேரார் தினதுபுகழ் பேசவே—நேராரும்
ஐந்துமுகன் ஆறுமுகன் ஆரியனும் சங்கரனும்
சிந்தைதனில் வந்தருளச் செய்

## நூல்

திருவாரும் கல்வீவரும் செல்வாக்கும் சேரும்
பெருவாழ்வும் பீடும் பெருகும்—உருவாகும்
வாளவந்தாள் தாளை வரம்புடனே போற்றினர்க்கு
ஆளவரும் முத்திசித்தி ஆம் 1

ஆமே பலபொருளும் ஆரணமும் ஆகமமும்
பூமாவின் வித்தைபல போகங்கள்—பூமேவு
தென்னிளசை வாழ்கின்ற தேவியாம் வாளவந்தாள்
தன்னிகராம் நல்லருளாற் றான் 2

## ஸ்ரீ வாளவந்தாள் அந்தாதி

தான்தான் எனவறிந்து சற்குருவே வாளவந்தாள்
நான் நீ எனும்விகற்பம் நந்திடச்செய்—போனாற்றான்
எல்லாமாய் நின்றபரம் என்னுளத்தில் நின்றிலகும்
வல்லபமாய் நீயருள வா 3

வாராயோ வாளவந்தாள் வந்தொருகால் நின்பதத்தைத்
தாராயோ என்சிரமேற் சற்குருவாய்—தீரா
வினையனைத்துந் தீர்த்துநீ வீடுதரும் ஞானம்
தனையெனுளம் நின்றிடவே தா 4

தானம் தவமிரண்டுந் தந்துநீ வாளவந்தாள்
வானநிகர் ஞானம் வழங்கெனக்கு—மோனம்
முடிவான நிட்டைதனை முத்திதர நித்தம்
அடியே னுளமிருத்தி ஆள் 5

ஆளாது நீயிருந்தால் ஆதரிப்பா ரரென்னை
வாள்போல் விழியுடைய வாளவந்தாள்—நாள்போகா
தின்றே யருள்புரிந்து என்கவலை தானொழித்து
நன்றாய்நான் வாழ்ந்திடநீ நாடு 6

நாட்டி லதிக புகழ்சேரும் நல்லிளசை
தாட்டிகமாய், வீற்றிருக்கும், சங்கரியே—கேட்டியால்
பல்லவத்தா லென்னைப் பரிதபிக்கச் செய்தவரை
வல்லபத்தால் வாளவந்தாள் வாட்டு 7

வாட்டி யெனதிடரை வாள்வந்தாள் மாற்றுவாய்
தீட்டி யெனதுணர்வைச் செப்பஞ்செய்—காட்டில்
மலையில் வனத்தில் மகதவங்கள் செய்ய
நிலைமையிலாப் புன்றவனேர் நில் 8

நில்லாய் தவக்கடலே நித்தியசனபம் பொன்னே நீ
பொல்லா வினையகற்றும் புண்ணியமே—கல்லாத
புல்லியனா னென்னையுன் பொன்னடியிற் சேர்ந்துறைய
எல்லாமாம் வாளவந்தாள் என் 9

எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணித் துயரடைந்து
புண்ணாக என்மனதைப் போகவிட்டாய்—கண்ணான
தாயே பராபரியே சற்குணியே வாளவந்தாள்
நீயே யெனையளிக்க நேர் 10

நேராரும் வேறில்லா நிர்க்குணியே வாளவந்தாள்
தீரா வினைதீர்க்கும் தெய்வமே—வாராய்நீ
என்பிறவி தானொழித்து ஏற்றபதந் தானளித்து
உன்பதமென் சென்னிதர [illegible] 11

உன்ன லொருபங் குரைத்த விருபங்கு
துன்னுதல் மூன்றுபங்காய்ச் சொற்றிடுவர்—இன்னதுதான்
புண்ணிய பாவம் பொருந்தா தெனக்கழித்துக்
கண்ணிய வாளவந்தாள் கா 12

காக்கக் கடனுனக்கே கார்வண்ணன் தங்கையே
ஆர்க்கும் அறியா அரும்பொருளே—தீர்க்கமாய்
எற்குன் அருளளித்து என்னம்மை வாளவந்தாள்
நற்றுணனாய் வாழவருள் நல்கு 13

நல்தவா யென்றுன் நளின மலர்ப்பதத்தை
அல்பகலாய் வந்துன் னடியடைந்தேன்—செல்வர் வாழ்
தென்னிளசை வாழ்பவளே சிங்கார வாளவந்தாள்
வ[illegible] மைதர என்மனதில் வாழ் 14

வாழ்த்தி வணங்குறுவார் வன்பவத்தை நீறுசெய்து
தாழ்த்தி யிடர்தொலைத்த சங்கரியே—பாழ்த்த
கொடியேன் வினைதொலைத்துக் கோவாள வந்தாள்
மிடியிலா வாழ்வருளுமே 15

அருளுவா யென்றுன் னடித்தா மரையடைந்தேன்
தெருளான வாளவந்த தேவி—மருளிலா
ஞான மெனக்களித்து நல்வரமு நீ தந்து
மோனமன மெற்கருள முன் 16

8. மக. தவம்—மகமும் தவமும்

முன்னாக நின்று முழு வெற்றி யெற்கருளாய்
மன்னே மணியே மரகதமே—பொன்னான
வாழ்வருளுந் தேவியே வாள்மேல் நடந்தவளே
தாழ்விலா முத்தியெற்குத் தா 17

தாருகன் கொவ்மதும் தான்பெற்ற வெற்றியதும்
தீரமாய் வென்று செயம் புரிந்தாய்—வீரமாய்
என்பகையை நீ கெடுத்து என்வசமாய் நீயிருந்து
நன்மைதனை வாளவந்தாள் நல்கு 18

நல்கா திருந்தக்கால் நான்செயிப்ப தெவ்வாறு
பல்கா லுனைப்பணிந்து பாடினேன்—அல்கா
தறமே வளர்த்தவளே அன்னைதந்தை யாகி
இறவாத வெற்றிதர எண் 19

எண்ணாது நீயிருந்தா லென்குறையை யார்முடிப்பார்
பண்ணான தீஞ்சொற் பரசிவையே—நண்ணார்கள்
வாடி வதங்கி வலிதொலைந்து கெட்டுவிடப்
பாடினேன் வாளவந்தாள் பார் 20

பாராதி அண்டம் பலகாற் படைத்தளிப்பாய்
வீராதி வீரர்களை வென்றிடுவாய்—நேராக
என்மனதில் நீயிருந்து என்குறையை நீமுடித்து
நன்மைசெய வாளவந்தாள் நாடு 21

நாடுவா யெற்கு நலந்தரவே வாளவந்தாள்
பாடிப் பரவிப் பரவசமாய்—நாடிநான்
உள்ளபடி வந்தடைந்தேன் உற்றதெலா நானுரைத்தேன்
கள்ளமற வென்றனைநீ கா 22

கார்போலும் மேனியளே காகுத்தன் தங்கையே
பார்மீ தடியனுளம் பார்ப்பவளே—போர்மேவு
சங்கார காளியே சண்டப்ர சண்டியே
சிங்கமிவர்ந் தென்முனநீ சேர் 23

15—தலைமை பெற்ற—வாளவந்தாள்

சேர்ந்து பலதுயரைச் சீக்கிரத்திற் தீர்த்து விடு
கூர்ந்துன் னருள்பெற நான் கூடினேன்—நேர்ந்து நிதம்
நல்ல வரங்கொடுத்து நாளு மென்னைப் புரக்க
வல்லமைசேர் வாளவந்தாள் வா 24

வாராயோ யென்று நிதம் வாடிப் பரதவித்தேன்
தீராநோய் தீர்க்கும் திரிபுரையே—பாரோர்கள்
எத்தனைதான் கேட்டாலும், இல்லையென் னாதருளும்
அத்தனம்மை வாளவந்தாள் ஆள் 25

ஆளும் பராபரையே அம்பிகையே துர்க்கனுடல்
மாளும் படி செய்த வாளவந்தாள்—கேளு நீ
என்னாற் சகிக்கவொண்ணா இன்னலிழை வம்பர்களை
யுன்னா லொழித்தருள வுன் 26

உன்னாலே பெற்றபய னொன்றல்ல வாளவந்தாள்
என்னாலே யாது பயனுனக்கு—மன்னா
மகிடன் தலையறுத்த மாதவியே யெற்குச்
சுமடரிழை துன்பகற்றத் தோன்று 27

தோன்றிப் பகையொழித்துச் சும்ப நிசும்பருடல்
ஊன்றி யுதைத்திட்ட வுத்தமியே—வான்றவர்சூழ்
தென்னிளசை வாழ்கின்ற தேவியே வாளவந்தாள்
என்பகையைத் தீர்த்துவிட எண் 28

எண்ணிப்பண் டாசுரனை யீடழித்த வாறதுபோல்
எண்ணி யெனக்கிடஞ்சல் செய்தவரை—நண்ணியே
தென்னிளசை வாழ்பவளே தேவியே வாளவந்தாள்
சென்னிநூ றாக்கிடவே செய் 29

செய்ய விளசை தினமு முறைபவளே
வையகம் வாழவந்த வாளவந்தாள்—துய்ய
மனமும் உடலும் மாசிலா வாக்கும்
இனமும் எனக்களிக்க எண் 30

எண்ணியே தக்கனுட லிடழித்த வாறதுபோல்
நண்ணி யெனக்கிடர்செய் நண்ணலரை—எண்ணியே
சீறிச் சிரமறுத்துச் சின்னபின்ன மாச்செயவே
மாறிலா வாளவந்தாள் வா 31

வாவாவா வாளவந்தாள் மண்ணில் நவதினம் நீ
தாவாத் தவஞ்செய்து தாருகனை—ஏவால்
அறுத்த விதம்போல் அடியேன் பகையை
நறுக்கி யெறிந்துவிட நாடு 32

நாடுபுகழ் தென்னிளசை நாளு முறைபவளே
வீடுதரு வாளவந்த வித்தகியே—தேடி நீ
என்றன் பவமொழித்து என்னிடரை நீயழித்து
உன்றன் பதந்தரவே உன் 33

உன்னி உனதுபதம் ஓர்போதும் நீங்காது
சென்னிதனிற் சூடிடநான் சிந்தித்தேன்—கன்னியே
வாளவந்த தேவி வரங்கள் பல தந்து
நாளவம்போ காதுபதம் நல்கு 34

நல்கு பதமெனக்கு நான் வேண்டும் வெற்றி கொடு
அல்பகலாய் நானிதமும் ஆதரித்தேன்—செல்வியே
வாளவந்தா ளென்றனக்த வாக்குப் பலிதம்செய்
கோளகல என்றனையாட் கொள் 35

கொள்ளுந் தனிப்பொருளே கொற்றமுடைக் காளியே
நள்ளார் தனையறுக்கும் நாயகியே—எள்ளாது
வாக்குப் பலிதமருள் வாளவந்தா ளென்றனை நீ
காக்கக் கடமைகொள்வாய் காண் 36

காணா ரசிபிரமர் கஞ்சமலர்த் தாளிணையை
நாணா தெனக்கருள நாடுகிறேன்—கோணாமல்
நீயே கொடுக்கலாம் நிற்கேட்பா ராருமிலை
தாயே நீ வாளவந்தாள் தான் 37

தானே எனக்குநீ தாயுமாந் தந்தையுமாந்
தேனே யமுதமே தீங்கனியே—மானேயோ
வாடா மலரே வனக்கிளியே பூமயிலே
தாடாற்ற வாளவந்தாள் தா 38

தாதா எனக்குன் தடவிழியும் பாதமுமே
மாதேவன் தன்னிடத்தில் வாழ்பவளே—கோதான
வன்பரிழை துன்பகற்றி வாள்மேல் நடந்தவளே
இன்பமெனக் கீந்தருள எண் 39

எண்ணாத வாளசுரன் ரத்தபீ ஜனுடலை
புண்ணாக நீயறுத்துப் போக்கினையே—எண்ணாது
எற்கிடரே தான்புரியும் ஈனர்களைத் துன்புறுத்தி
நண்ணா தறுக்கநனி நாடு 40

நாடுதனிற் பீடுபெறு நல்லிளசை மாநகரில்
ஈடுபெற நானிருக்க எண்ணினையே—கேடு செயும்
சத்துருவை வாட்டித் தனிவெற்றி நான்பெறவே
நித்தமென்பால் வாளவந்தாள் நில் 41

நில்லாத செல்வமதை நித்தியமாய் நானினைத்து
கல்லாத புல்லியரால் கட்டமுற்றேன்—பொல்லாத
பாவ வினையொழித்துப் பாதகரை நீயழித்துச்
சாவறவே வாளவந்தாள் தா 42

தாராய் பரமபதம் சாந்தி தமமுதலாய்க்
கூரான புத்தியுத்தி கூர்ஞானம்—நேரான
வாழ்வும் எனக்கருளி வாள்மேல் நடந்தவளே
தாழ்விலா முத்தியெற்குத் தா 43

தாராய்நீ வாளவந்தாள் தண்ணருளும் புண்ணியமும்
தீரா நோய் தீர்க்குந் திறமையும்—சீராரும்
வாக்குப் பலிதமும் வந்தனைசெய் சிந்தையரை
ஆக்கும் அருளுமளித் தாள் 44

ஆளாய் நீ வாளவந்தாள் அன்பும் அருளுமே
மாளாத செல்வம் வலியுடைமை—மீளாத
வாக்குப் பலிதமும் வன்மையமை கல்வியுடன்
பாக்கியமெ லாமளிக்கப் பார் 45

பாராது நீயிருந்தாற் பார்மீதில் வேறார்தான்
தேராத வெற்குத் தெளிவிப்பார்—ஏராரும்
வாள்மேல் நடந்தவளே வன்மையுள மாகாளி
தாள்கொடுத்து வெற்றியெற்குத் தா 46

தாதாவும் மாதாவும் சற்குருவு மானவளே
வேதாவும் மாலுடனே விண்ணவரும்—ஓதாத
நின்பெருமை நானுரைத்து நேர்மையுடன் வாழ்வதற்கு
நன்மைசெய வாளவந்தாள் நாடு 47

38. தாடாற்றல்—உதவி செய்ய

நாடும் பொருளனைத்தும் நன்றா யறிந்தவர்க்குக்
கேடொன்றும் வாராமல் கிட்டுவிக்கும்—வீடு தரும்
தாள்கொடுத்து ரக்ஷிக்கும் தாழாத வாழ்வருளும்
வாள்மேல் நடந்தவனை வாழ்த்து 48

வாழ்த்திப் பவந்தொலைத்து வாளவந்தாள் தாள் சென்னி
தாழ்த்தித் துயரனைத்துந் தாண்டிடவும்—ஊழ்த்தி
மலர்சொரிந்து தேவிதனை வந்தித்து நெஞ்சே
பலபிறவி நீக்கவும் நீ பார் 49

பாரிற் கொடுமைபுரி பாணா சுரனுடலை
நேரி லறுத்தெரிந்த நிஷ்டுரி—சீரில்
வணங்கார் சிரமறுத்த வாளவந்தாள் எற்கு
இணங்காரை யிற்றுவிழ எண் 50

எண்ணி குருவசுரன் இற்று வொழிந்துவிடப்
பண்ணி யறம்வளர்த்த பார்வதியே—நண்ணி
எனக்குத் துயரளித்த ஏதிலரைச் சாடி
மனத்துயரை வாளவந்தாள் மாற்று 51

மாற்று மனத்துயரை மாதவியே வாளவந்தாள்
தேற்று எனதுளத்தைச் சீக்கிரத்தில்—மாற்றலராய்
வம்பு பலபுரியும் வன்கணரைத் துன்புறுத்தி
நம்பினெற்கு வெற்றிசெய நாடு 52

நாடு வியாக்கிரனும் நன்மையிலாத் துன்முகனும்
பீடுபஞ்ச ராவணரும் பீதியொடு—ஓடியே
மாண்டு மடிந்துவிட வாளவந்தாள் செய்தனையென்
வேண்டலரை மாண்டகல விள்ர 53

விள்ளும் பொருளளித்து வேண்டுவன தான் கொடுத்து
கொள்ளும் பொருள்கொடுத்த கொற்றவையே—தள்ளியே
நாள்கழியா தெற்கு நலன்பலன்கள் தான் தரவே
வாளவந்தா ளென்னெதிரே வா 54

வாராயோ வாளவந்தாள் வந்தொருகா லென்கவலை
தீராயோ வென்று தினந்துதித்தேன—பாராய்
கடைக்கண்ணால் பார்த்தெனது கன்மமெலாந் தீர்த்து
துடைத்திடுவேன் ஜென்மமெனச் சொல் 55

சொல்லும் பொருளும் எனவே சுடரொளியில்
புல்லும் பரிமளப் பூங்கொடியே—அல்பகலாய்
உன்னையே நம்பி யுறைந்தேன் நான் வாளவந்தாள்
என்னைநீ கைவிடா தே 56

தேனே கனிரசமே தித்திக்கும் செங்கரும்பே
மானே மரகதமே வாளவந்தாள்—நானேநீ
யாக வமர்ந்தென்னை யாண்டுகொள்ள வேண்டுகிறேன்
மாகமார் மின்கொடியே வா 57

வாழ்வார வாழ்ந்தாலும் வாளவந்தா ளுன்கிருபை
தாழா திருந்தாலே தான்பெருமை—ஊழால்
வருவதுதான் வந்தாலும் வல்லையதை மாற்றிப்
பெருமைபெறு வெற்றிவரப் பேண 58

பேணாது நீயிருந்தால் பேருலகில் யாரென்னைக்
கோணாது காத்துக் குறைதவிர்ப்பார்—நாணாளும்
உன்னையே நம்பி யுறைகின்றேன் வாளவந்தாள்
என்னைநீ விட்டுவிடா தே 59

தேவாதி தேவர்களும் சித்தரோடு முத்தர்களும்
மூவர் முனிவர் முதலியரும்—தேவியே
உன்னை வணங்குகின்றா ருத்தமியே வாளவந்தாள்
என்னைநீ யாளவந்து யேல் 60

ஏலாது நீயிருந்தா லென்னைத்தான் யாரேற்பார்
கோலா கலமான கோமதியே—வாலையே
திரிபுரையே வாளவந்த தெய்வமே யெற்கு
மருவிலா வெற்றிதர வா 61

வாலை புவனை திரிபுரையே வாளவந்தாள்
காலையு மாலையு முன் கால்பணிந்தேன்—கோலமுற
வெற்றி யெனக்களித்து வீரமா காளியே
மற்றவெலாம் பின்பருள வா 62

வாராத இன்பம் வருவிப்பாய் வாளவந்தாள்
தீராத நோயெல்லாந் தீர்ப்பாய்நீ—நேராரும்
நிட்டையும் நீயளித்து நேரேது மில்லாத
துட்டரைத் தோற்றொழியச் சொல் 63

சொல்லா லறியவொண்ணாச் சுத்தசுக வாழ்வதனில்
நில்லாத என்மனத்தை நிற்கவை—பொல்லாத
துட்டர் துயரகற்று சோகமறு வாளவந்தாள்
கட்டமெலாம் எற்கொழித்துக் கா 64

கார்மேக வண்ணமுடைக் காளியே காகுத்தன்
பேர்மேவு தங்கை பெருமாட்டி—சீர்மேவு
தென்னிளசை வாள்வந்தாள் சேயேன் மனமிருந்து
நன்னயமெல் லாமருள நாடு 65

நாட்டி லதிக புகழ்சேரும் நல்லிளசை
தாட்டிக மாகத் தனித்துறைவாய்—கேட்டியால்
வாளவந்தா ளெற்கு வளமான ஞானமளித்
தாளவே யுன்கடமை யாம் 66

ஆமாம் பலபொருளும் ஆடுசுற்றம் மாடுமகர்
போம்போம் வறுமைபிணி பொல்லாங்கு—பூமாவின்
ஞானமருள் வாளவந்தாள் நல்லிசையை நாடோறும்
ஈனமற எப்போதும் ஏத்து 67

ஏத்திப் பணிபவர்க்கு ஏழேழ் தலைமுறையும்
காய்த்துப் பழுத்த கருமமெலாம்—தீய்த்துவிடும்
ஞானமொளி தருளி நல்வீடு தந்திடவே
தானமரும் வாளவந்தாள் தாள் 68

தாளே கொடுத்தென்னைச் சற்காரம் செய்துநீ
வாளேர் விழியுடைய வாளவந்தாள்—கோளேறும்
வம்பருடைத் துன்பருத்து வல்வினையைச் சுட்டெரித்து
நம்பினெற்கு வெற்றிதர நாடு 69

நாடாய் பலபொழுதும் நம்பி யுனையடைந்து
பாடேதான் பட்டுப் பரிதபித்தேன்—கேடேதும்
இல்லாத வாழ்வளித்து ஏற்றுவாய் வாளவந்தாள்
நல்லார் நடுவிருக்க நான் 70

நானா யிருந்திலகும் நல்லவொளி நாட்டமதை
வானோர் வழுத்துபுகழ் வாளவந்தாள்—தேனாரும்
சொல்லினாற் கூறிச் சுடரொளியைக் காட்டிவிடு
நல்லவித மாயிருக்க நான் 71

72. நடுவானவேதமொழி—பாரபக்ஷமில்லாதசுருதிவாக்கியம்

நானேநீ யென்ற நடுவான வேதமொழி
தானேமெய் யென்றுரைத்த சற்குரவர்—வானேரும்
நீடு புகழுடைய நின்சொருப ராய்நினைய
பாடுபெறு வாளவந்தாள் பார் 72

பார்புனலாய்த் தீவளியாய்ப் பானுமதி வானுயிராய்த்
தேரும் வடிவெட்டுந் தேவியுன்றன்—சீர்வடிவே
என்று தினம் நினைந்து என்பிறவி தானகல
நன்றுதரு வாளவந்தாள் நாடு 73

நாடாய் பவமகல நாயகியே வாளவந்தாள்
வீடாய் இளசைவளர் வித்தகியே—தேடாத
செல்வமாய்க் கல்வியாய்த் தேனாய்க் கனிரசமாய்
நல்லமுதா யெண்ணினனே நான் 74

நானா யிருந்ததுவும் நானேநா னல்லவாய்க்
கானாய் மலையாய்க் கடல்புவியாய்—வானாய
பல்பொருளும் நானென்று பார்க்கும் பர திருஷ்டி
நல்லதொரு வாளவந்தாள் நல்கு 75

நல்கு பரஞானம் நல்கு பரமோக்ஷம்
நல்குவாய் கல்விதனம் நாடுபொருள்—பல்வளமார்
தென்னிளசை வாள்பவளே தேவியே வாளவந்தாள்
நன்னிலைமை யென்னகத்தில் நல்கு 76

நல்குவா யென்றுன் நளின மலர்ப்பதத்தை
அல்பகலாய்க் காந்திருந்தே னம்மையே—நல்குரவு
என்று மணுகாமல் ஏழ்பிறவி வாராமல்
வென்றிபெற வாளவந்தாள் வின் 77

விள்ளும் வரமெனக்கு வேணதெல்லாந் தான்தருவாள்
கொள்ளும் பொருள்கள் கொடுப்பாளே—தெள்ளுணர்வு
சீக்கிரமே தந்து தெவிட்டாத தெள்ளமுதம்
வாக்கினிலே வைத்தருள வா 78

வாராகி நீலி வயிரவி சண்டியே
பாரோர் புகழ்ந்தேத்தும் பார்வதியே—நேராரும்
இல்லாத வல்லவளே ஈடுபெறு வாளவந்தாள்
நல்லா யெனக்கருள நாடு 79

நாடு முமுக்ஷுகட்கும் நல்லவப்பி யாசிகட்கும்
பீடு அனுபவிக்கும் பேறளிக்கும்—ஈடுடைய
வாளவந்த அம்மை வலிய அழைத்தெனக்கு
தாளளித்து வீடுணர்வு தா 80

தாரா யெனக்குனருள் தந்து மனத்தெளிவும்
தீரா விசாரத் தெளிவுடனே—பேராத
ஆனந்த நிட்டையும் அத்துவித முத்தியும்
தானந்த வாளவந்தாள் தா 81

தாதாவும் மாதாவும் சங்கரனு மாலுடனே
வேதாவும் நீயானால் வித்தகியே—தோதாக
யார்தான் துணைபுரிவார் அம்பிகையே வாளவந்தாள்
சோராமல் வெற்றிசெயச் சொல் 82

சொல்லித் துதித்துத் தொழுது பலபகல்யான்
எல்லா விதத்திலும் ஈடுபட்டேன்—நல்லாய்கேள்
உன்கிருபை பெற்று வுலகமதில் யான்வாழச்
செல்வமலி வாளவந்தாள் செய் 83

செய்தீ வினைவசத்தாற் சென்மமெது வந்தாலும்
கய்நெல்லிக் காயெனவே கண்குளிர—துய்யநின்
பொன்னார்ந்த சேவடியைப் போற்றிப் புகழ்ந்துவரக்
கன்னியுமை வாளவந்தாள் கா 84

காகா வெனவுனையான் கண்டபடி கேட்டுவிட்டேன்
பாகார்ந்த சொல்லுடைய பார்வதியே—வாகான
நின்பதத்தை யெற்களித்து நீர்மைநிறை வாக்குமனம்
தன்படியே வாளவந்தாள் தா 85

தாதா வெனவுனிடம் சற்குருவே வாளவந்தாள்
ஓதாத வெல்லாம் உரைத்துவிட்டேன்—நீதான்
இணங்கி யருள்புரிந்து என்றனக்கு வெற்றி
சுணங்காமல் நீகொடுக்கச் சொல் 86

சொல்லே பொருளே துணையே யெனவுனையே
அல்லே பகலே அரற்றினேன்—வல்லமைசேர்
வாளவந்தாள் நீயே வழித்துணைய தாயிருந்து
ஆளவரு வாயென்னம் பாள் 87

அம்பாளே வாளவந்தாள் அல்பகலாய் நானினைத்து
உன்பால் உரைத்த துளங்கொளுவாய்—வன்பாக
என்னுளத்தைத் துன்புறுத்த என்றுமிடந் தந்திடேல்
உன்பதத்தி லாணையிட்டேன் உன் 88

உன்னாலே யாகாத தொன்றுமிலை வாளவந்தாள்
என்னையினிச் சோதிக்க எண்ணாதே—பொன்னான
வுன்பதத்தை நம்பினேன் உற்றதெலாம் நானுரைத்தேன்
அன்னையெனை யாதரித்து ஆள் 89

ஆளாது நீயிருந்தால் அஞ்சலென்பா ராரென்னை
வாள்போல் விழியுடைய வாளவந்தாள்—நீள்போது
உன்னையே நம்பி யுறுதியுடன் வாழுகிறேன்
என்னைநீ கைவிடா தே 90

தேவாதி தேவர்களும் தீர்க்க தரிசிகளும்
பூவாதி கொண்டுவுனைப் போற்றியே—ஓவாது
பெற்றபலன் என்னென்பேன் பேரின்ப வாழ்வடைய
நற்றவமே வாளவந்தாள் நல்கு 91

நல்கு குருவருளை நாடோறும் சித்த சுத்தி
மல்கும் வகையருளு வாளவந்தாள்—பல்கியே
சற்சா தனங்களுடன் தக்கவர்கள் கூட்டமும்
சத்கேள்வி தர்க்கயுத்தி தா 92

தாராய் மனனமும் தன்தெளிவும் நிட்டையுடன்
பேராத வின்பப் பெருவாழ்வும்—சீரான
கல்வியொடு செல்வம் கனிந்துருகு பக்தியுமே
பல்கிவர வாளவந்தாள் பார் 93

பார்த்துப் பரமபதம் பண்பா யெனக் கருளித்
தீர்த்துச் சேனனமர ணாதிகளைப்—பேர்த்துப்
பிறவா நெறியளித்துப் பேரின்ப வாழ்வு
உறவாக வாளவந்தாள் உன் 94

உன்னைச் சரணடைந்து வுன்னடியார் தாள்பணிய
என்னை யெனக்களித்த ஈஸ்வரியே—நன்னயமாம்
நிட்டை பலபுரிந்து நீர்மையுடன் வாழ்வதற்கு
இட்டமுடன் வாளவந்தாள் ஈ 95

ஈயாத லோபியர்கள் என்மீது வெஞ்சமாய்
ஓயா திடைஞ்ச லுஞற்றுகிறார்—தாயே நீ
அன்னவரை வென்று அடியேற் குதவிசெய
நன்னயமாய் வாளவந்தாள் நரடு 96

நாடு சமதமமும் நல்லமன நாசமுடன்
வீடுதரு ஞானம் விரைந்தளிப்பாய்—கேடுசெயும்
வாசனையின் நாசமும் வாளவந்த அம்மையே
தேசுடனான் வாழநீ செய் 97

செய்யாய்நீ வாளவந்தாள் தேகவா ரோக்கியமும்
பொய்யாத வாழ்வு புலனடக்கம்—மெய்யாகத்
தீர்க்க வயதும் திடகாத் திரம்வன்மை
வாக்குப் பலிதம் நல் வாக்கு 98

வாக்கும் மனமும் மலர்ந்த முகமுடனே
நோக்கும் குளிர்ந்த நுனிமதியும் பாக்கியங்கள்
எல்லாமாம் வாழ்வும் இனியவுணர் வானநிட்டை
நல்லாக வாளவந்தாள் நாடு 99

நாட்டிற் பலகாலம் நானிருந்து நன்மைசெய
வீட்டில் இனிதாக மேவியிடக்—கூற்றுவான்ால்
எந்த விதயிடரும் என்னையணு காதிருக்கச்
சிந்தைசெய்தேன் வாளவந்தாள் சீர் 100

திருச்சிற்றம்பலம்



ஸ்ரீ இளையான்குடியில் கோவில் கொண்டு இருக்கும்
## ஸ்ரீ ஞானம்பிகை சமேத ஸ்ரீ ராஜேந்திர ஜோதீஸ்வரர் மீது பாடிய திருத்தாண்டகம்

### திருச்சிற்றம்பலம்

சீரானைத் திரிபுரங்க ளெரித்தான் றன்னைத்
திருநெறிக ளருமறைக்கண் செய்வித் தானைப்
பேரரனை யுரிபோர்த்த பெம்மான் றன்னைப்
பேயாடுஞ் சுடுகாடே வீடா னானை
நேரானை நேர்மையுளா ருள்ளத் தானை
நின்மலனை யென்மனநே ரிளசை யென்னும்
ஊரானை யொருமிட முள்ளு வார்கள்
உணர்வலேல் பிறவாழி நீந்து வாரே 1

சீராருஞ் சதுர்மறையுந் திகழ வோதித்
தெளிவுறவே கலைகளெலாங் கற்றோ ரேனும்
பேராரும் யோகமுடன் போகம் எல்லாம்
பிணக்கறவே கைவந்த பெரியோ ரேனும்
தாராருஞ் சடைமுடியா னிளசை மேவுஞ்
சங்கரனைத் தனிமனத்தா லுன்னா ராயின்
நாராருப முருக்கமலர் மனமே போல
நல மிழந்து பலமிழந்து நலிகு வாரே 2

கண்டார்க ளுள்ளத்துக் கரியா னானைக்
காணாதா ருள்ளத்துக் கரிதா னானை
விண்டார்க ளுள்ளத்து வெளிதா னானை
விள்ளாதா ருள்ளத்து வெளியா னானைக்
கண்டாகிக் கனியாகிக் கனிர சம்போற்
கருதுவார் கருத்தினுட் கலந்து நின்ற
வொண்டேனை யிளசைநகர்ச் சோதியான
வுத்தமனை யென்னுளத்தில் உன்னி னேனே 3

எருக்கினொடு கொன்றையரு கணிந்தான் றன்னை
யேமனொடு காமனையும் வென்றான் றன்னை
மருக்குலவு மலரில்மண மானான் றன்னை
மாமணியி னொளியாகி நின்றான் றன்னைச்

கருக்குழியி லடியவரை வீழா வண்ணங்
கதிமீதி லுய்க்கவல்ல கடவுள் தன்னை
தெருக்குலவு மிளசைவளர் தேவன் றன்னைச்
சிந்தனையில் வந்தனைசெய் துய்கு வேனே 4

மனமணியை மனமணியி லழுக்கை மாற்றும்
மாமணியை மாமணியி லொளிபோல் நின்ற
தினமணியைத் தினமணியும் மதியுங் கண்ணாஞ்
சிரமணியைத் தேவர்க்குந் தேவாய் நின்ற
கனமணியைக் கண்ணுளத்தாற் காண வேண்டின்
கருமுகில்சூழ் பொழிலிளசை கலந்து ஆங்கு
அனமணிசெய் தீர்த்தமதில் மூழ்கி நாளும்
அருகிலுள ஆலயத்தைச் சேரு வாரே 5

வானாடர் தொழுதேத்த வல்லான் றன்னை
வானவர்க்கும் மானவர்க்கு மறியான் றன்னை
ஆனாத அன்புளத்தி லில்லேன் றன்னை
அநாதரவு செய்யாத அமலன் றன்னை
தேனாகப் பாலாகத் திகழ்வான் றன்னைத்
தென்னிளசை யெந்நாளும் வாழ்வான் றன்னைத்
தானாகத் தொழுதுறைய வல்லா ரெல்லாம்
சகஜசமா தியையுற்றுத் திகழ்வார் தாமே 6

நல்லோர்கள் மனநித்த முறைவான் றன்னை
நாயெனையும் அடியவனாய் வைத்தான் றன்னைப்
பொல்லாதார் நடுவுளத்திற் பொருந்தான் றன்னைப்
புண்ணியராம் நால்வருக்குப் போத மூட்டக்
கல்லால நீழலினி திருந்தான் றன்னைக்
கனகநெடு மாடமலி யிளசை தன்னில்
செல்லாரும் மதில்நிறைசூ ழால யத்திற்
சிவனவனை யனுதினமுஞ் சிந்திப் பேனே 7

மாலாகி நான்முகனாய் நின்றான் றன்னை
மறைநாலா யாகமமா யமர்ந்தான் றன்னைக்
காலாகி யனல்மதியாய் ரவியா னானைக்
கண்மணியாய்ப் புண்ணிமாய்க் கலந்தான் றன்னை

நாலாய பத மோக்ஷ மானான் றன்னை
நாயகனைத் தென்னிளசைக் கோயி லானைப்
பாலான மனமதனாற் காண வல்லார்
பரமபத வாழ்விலுறும் பண்பி னாரே 8

பந்தங்க ளனைத்தினையு மறுத்தான் றன்னைப்
பாரெரிவின் கால் புனலாய் நின்றான் றன்னை
அந்த நடு வாதியிலா அமலன் றன்னை
ஆரணத்தோ டாகமங்க ளாக்கி னானைக்
கந்தமைந்தின் வழிசென்ற கடைய னேனைக்
கடிபொழில்சூ ழிளசைநகர் காக்க வந்த
அந்தணனை நா... பாட வல்லார்
ஆக்கைய... க்கமதை யடைகு வாரே 9

ஆதியா யனாதியாய் நின்றான் றன்னை
அண்ட ரண்ட கோடியெலா மாக்கி னானை
நீதியாய் நெறிமுறைகள் வகுத்தான் றன்னை
நீசர்க்குந் தாசர்க்கு நேரா னானைச்
சோதியாய்ச் சுடர்விளக்காய்த் தோன்றி னானைச்
சோலைவள ரிளசைநகர்ச் சோதி யானைப்
பாதியா மன நிலையாற் பாடு வார்கள்
பாதியஸ்தி யின்பமதிற் படிகு வாரே 10

திருச்சிற்றம்பலம்



ஸ்ரீ இளையான்குடியில் கோவில் கொண்டு இருக்கும்

# ஸ்ரீ ஞானாம்பிகை மீது பாடிய துதி பஞ்சகம்

## திருச்சிற்றம்பலம்.



அரகர வொலியே அந்தர வெளியே
அம்பிகை யுமையே யருள்த ருவாய்
குருபர மணியே குமரிசற் குணியே
குடிலையின் பொருளே குணம
சரவண புவனைக் கயமுக மணியைத்
தந்திடு மொளியே சரண்த ருவாய்
நரசுர முனிவ ரனுதினம் பரவும்
ஞானமுந் தருவாய் ஞானநா யகியே 1

திருமரு மார்பன் செழுமலர் மேலோன்
தேடியுங் காணாச் சிவமாம் பொருளின்
அருகினி லமரும் அரும் பொனே மணியே
அடியனை நாளும் ஆளுநல் லருளே
ஒருமறை கோடி யுறுவமாய் நின்றும்
ஓதிட வரிய வொருதிரு வுருவே
கருவுறு துயரமொரு வியுன் பாதம்
காணநீ யருளாய் ஞானநா யகியே 2

குருமணி மாட கூடங்க ளோங்கிக்
குலவிடு கின்ற விளசையம் பதியில்
திருமணி குயின்ற செம்பொனா லயத்திற்
தினமிருந் தொளிருந் தெருண்மணி விளக்கே
அருமறை முடிவே யடியரை யாளும்
அந்தரி ஞான வம்பிகை யுமையே
தெருமரும் பிறவி சிதைத்தெனை யுன்றன்
திருவடி சேர்ப்பாய் சிற்பர ரூபி 3

கருணையின் வடிவே கதிதரு மதியே
கருதிய தளிக்குங் கருத்துறு கருத்தே
மருணெறி யறுத்துத் தெருளினை யிருத்தி
மாண்பினை யளிக்கும் மருந்தருள் மருந்தே
அருணெறி யளித்து இருவினை யொழித்து
அருளினை யருத்தும் அரும்பெரும் அருளே
தெருணெறி யடையத் தெளிவினைக் காட்டுந்
தேவியே ஞான நாயகி யுமையே

அன்புரு வான அருமறைத் தாயே
ஆகத்தை வெறுக்கும் அறிவரு ளறிவே
இன்புரு வான வென்னுரு வடைய
என்குரு வாகி யெழுந்தரு ளிறைவி
துன்புரு வசுல நன்மகா வாக்கின்
சோதனைப் பொருளாய்த் தோற்றிடுஞ் சோதி
நன்மனத் துன்னை நாளுமே போற்ற
நன்மதி தருவாய் ஞானநா யகியே

திருச்சிற்றம்பலம்

இந்திரன் மாறன் என்குருபணி களெலாம்
இந்துசுடர்போ லியங்கவே இங்கு

சம்பூரணம்





# ஸ்ரீலஸ்ரீ சிவானந்த ஞான தேசிக ஸ்வாமிகள் இயற்றிய நூல்கள்

## அச்சு இயற்றிய நூல்கள்

1 ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம்
2 ஸ்ரீ சற்குரு பாமாலை
3 ஸ்ரீ கொடுமளூர் முருகன் திருப்புகழ்
4 ஸ்ரீ இளையான்குடி முருகன் திருப்புகழ்
5 ஸ்ரீ சற்குரு மீது, சப்த ரசமஞ்சரி
6 ஸ்ரீ மதுரை குட்டைய ஞான தேசிக ஸ்வாமிகள் மீது ஸ்தோத்திரம்
7 ஸ்ரீ இளையான்குடி மாறநாயனார் மீது ஸ்தோத்திரம்
8 ஸ்ரீ நாகநாத சுவாமி மீது அந்தாதி
9 ஸ்ரீ வாளவத்தம்பாள் மீது அந்தாதி



## அச்சு இயற்றவேண்டிய நூல்கள்

1 அன்புநெறிவிளக்கம் (என்ற) ஞானநெறி விளக்கம்
2 ஸ்ரீ நால்வர் திருமணி மாலை
3 சிவலிங்க ஸ்தோத்திரம் 1008
4 ஸ்ரீ ஸ்தோத்திரக் கதம்பம்
5 சற்குரு பாமாலை
6 அகிலாண்டேஸ்வரி ஸ்தோத்திரம்
7 திருமூலர் மீது திருத்தாண்டகம்
8 ஸ்ரீ சற்குரு ஸ்தோத்திரம்
9 ஸ்ரீ சற்குரு அனுபூதி
10 ஸ்ரீ செல்லமுத்து அம்பாள் மீது அந்தாதி
11 ஸ்ரீ கர்மமுனியஸ்வர் மீது ஸ்தோத்திரம்
12 ஸ்ரீ இராஜஇந்திர சோதிஸ்வரர்மீது திருத்தாண்டகம் ஸ்தோத்திரம்
13 ஸ்ரீ ஞானம்பிகைபம்பாள்மீது ஸ்தோத்திரம் (துதிபஞ்சகம்)
14 ஸ்ரீ நாவலர்மீது புகழ்மாலை
15 ஸ்ரீ கொடுமளூர் குமரன் மீது ஞானஉலா



இன்னும் பல நூல்களும் சித்திர கவிகளுமுண்டு



சிவா. குப்புச்சாமி
335, வேதாந்த மடம், இளையான்குடி.

